உ

கணபதிதுணை.

ஔவையாரருளிச்செய்த

# ஆத்திசூடியும்,

# கொன்றைவேந்தனும்.

இவை

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்களால்

திருத்தப்பட்ட உரையுடன்



சுவாமிநாதபண்டிதரால்

சென்னபட்டணம்

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

இராக்ஷச௵ வைகாசிமீ,

இதன் விலை அணா-௧.

உ

கணபதிதுணை.

ஔவையார் அருளிச்செய்த

# ஆத்திசூடியும், கொன்றைவேந்தனும்.



இவை

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்களால்

திருத்தப்பட்ட உரையுடன்

சுவாமிநாதபண்டிதரால்

தமது

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

சென்னபட்டணம்:

இராக்ஷச௵ புரட்டாதி௴.

இதன்விலை அணா-௧.

கணபதிதுணை.

# ஔவையார்சரித்திரச்சுருக்கம்.



இவர், ஆதி என்னும் புலைச்சி வயிற்றிலே பகவன் என்னும் அந்தணனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்தபொழுதே தெய்வத் திருவருள் கைவரப் பெற்றுப் பெரும்புலமை வாய்ந்தவர். அதற்குப் போதிய சான்று, இவர் தாயாகிய ஆதி என்பாள் தன் நாயகனுகிய பகவனுக்குச் செய்துகொண்ட வாக்குத் தத்தத்தின்படி இவர் பிறந்தவுடன் இவரைப் பிரிந்து செல்லக் காலெழாமல் வருத்தமுற்று நின்றபோது, "எவ்வுயிருங் காப்பதற்கோ ரீசனுண்டோ வில்லையோ, அவ்வுயிரில் யானுமொன்றிங் கல்லேனோ—வவ்வி, அருகுவது கொண்டிங் கலைவானேனன்னுய், வருகுவது தானே வரும்." என்று இவர் அருளிச் செய்த வெண்பாவேயாம். அதுகேட்ட தாய் மனமகிழ்ந்து இவரைப் பிரிந்து சென்றனள். அதன்பின் இவர் காவிரிப்பூம் பட்டினத்திலே பாணரகத்திலே வளர்ந்தவர். அறிவானுன்ற பெரியோரெல்லாம் அத்தியற்புத மடையத்தக்க பெரும்புலமை உடைமையினுலே பற்பல பெருமை வாய்ந்த அரிய நூல்களைச் செய்தருளினவர்.

இவர் செய்தருளிய நூல்கள்:—க. விநாயகரகவல், உ. ஆத்திசூடி, ௩. கொன்றைவேந்தன், ச. மூதுரை என வழங்கும் வாக்குண்டாம், ரு. நல்வழி, சு. பந்தனந்தாதி, எ. அச

திக்கோவை, அ. ஞானக்குறள், கூ. தனிப்பாடற்றிரட்டு புற நானூறு இவற்றிலுள்ள தனிச்செய்யுட்கள், க௦. அருந்தமிழ் மாலை, கக. நன்னூற்கோவை, கஉ. நான்மணிக்கோவை, கங. தரிசனப்பத்து என்பன.

சிறுபாணாற்றுப்படையிலே "மால்வரைக் – கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி - அமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த வதிகன்" என்று நத்தத்தனாரும், திவாகரத்திலே "ஔ வைபாடிய வம்பற் கிழவன்" என்று சேந்தனாரும், தொண்டை மண்டல சதகத்திலே "சொல்லாயு மௌவை" என்று படிக் காசுப்புலவரும், திருக்குறளுரையிலே "ஔவை யுண்ட நெல் லிக்கனிபோல" என்று பரிமேலழகரும் இவர் செயலைக் குறித்து வியந்து கூறியிருக்கின்றனர்.

தொல்காப்பியப் பொருளதிகார உரையிலும், பொருந ராற்றுப்படையுரையிலும் "கொன்றை வேந்தன் செல்வனடி யிணை, என்று மேத்தித் தொழுவோ மியாமே" எனவும், "அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய், நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்" எனவும், "களம்புக லோம்புமின்" எனவும், "தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்" எனவும், "வாயி லோயே வாயி லோயே" எனவும், "தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" எனவும் வரும் இவர் வாக்கியங்களை உச்சி மேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரும் உதாரணமாக எடுத் துக் காட்டினர்.

இவற்றாலும் இவரது புலமைத்திறமை நன்கு புலப்படும்.

இவரை விசேடமாகப் போற்றிவந்த அரசன் அதிய மான்நெடுமானஞ்சி. இவ்வரசன் ஒரு காலத்திலே தன்னை உண்டார்க்கு வாழ்நாளைப் பெரிது கொடுக்கும் கருநெல்லிப் பழத்தைத் தான்பெற்று அதனை ஔவையாருக்குக் கொடுத்த பொழுது அவர் மகிழ்ந்து "மன்னுக பெரும நீயே தொன் னிலைப், பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட, சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா, தாத னின்னகத் தடக்கிச், சாத னீங்க வெமக்கீந் தனையே" என்று அவனை வியந்து பாடினர். திருக்குறள் உரையிலும், சிறுபாணாற்றுப்படை உரையிலும் சுட்டப்பட்ட கனி இதுவே. இன்னும் இவராற் பாடப்பட் டோர் தொண்டைமான், அதியமான் பொருட்டெழினி முத லாகப் பலர் உளர்.

புறநானூற்றுச் செய்யுட்களைப் பார்க்கும்போது ஔவை யார் காலத்துப்புலவர்கள் அரிசிற்கிழார், பரணர், பெருந்தலைச் சாத்தனார், மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலி யோர் முப்பதின்மருக்கு மேற்பட்டோர் இருந்தனர் என்று புலப்படுகின்றது. ஆதலால் கடைச்சங்கத்தார் காலமே ஔவை யார் காலம் என்று துணியக்கிடக்கின்றது.

அங்ஙனமாயின், சுந்தரமூர்த்திநாயனாரும் சேரமான் பெரு மாணாயனாரும் கைலாசத்திற் கெழுந்தருளும்போது ஔவை யாரை வரும்படி நினைக்க ஔவையார் ஞானத்தா லஃதுணர் ந்து தமது ஆன்மார்த்த பூசையாகிய விநாயக பூசையை வழக் கம்போல அமைதியாய்ச் செய்யாமல் விரைந்து செயக்கண்ட விநாயகர் இற்றைத்தினம் பூசையை விரையச்செய்தற்குக் கார

ணம் என்னை யென்று அறியாதார் போன்று வினவ, ஔவை யார் சுந்தரமூர்த்திநாயனாரும் சேரமான்பெருமாணாயனாரும் கைலைக்கெழுந்தருளுகின்றார்கள்; என்னையும் வரும்படி கருதினர் அதனால் விரையச் செய்கின்றேன் என்று விண்ணப்பஞ் செய்ய, விநாயகர் ஔவையே ! நீ வழக்கம்போற் பூசிப்பாயாக அவர்கட்குமுன் உன்னைக் கைலையில் விடுப்பேம் என்று அருளிச்செய்தனர். அதன்பின் வழக்கம்போல அமைதியாகப் பூசையைச்செய்து முடித்தார். முடித்தவுடன் விநாயகர் ஔவையாரைத் தமது துதிக்கையில் வைத்து நீட்டி அவர்கட்குமுன் கைலாசத்தில் விடுத்தனர். அது கண்ட சுந்தரமூர்த்திநாயனாரும் சேரமான்பெருமாணாயனாரும் ஔவையாரை வாழ்த்தினர். அப்போது ஔவையார் "மதுர மொழிநல் லுமையாள் சிறுவன் மலரடியை, முதிர நினையவல் லார்க்கரி தோமுகில் போன்முழங்கி, அதிர வருகின்ற யானையுந் தேரு மதன்பின்சென்ற, குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே." என்று பாடினர் என்னுஞ் சரித்திர முண்மையாலும், சுந்தரமூர்த்திநாயனார் "பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்" என்று திருத்தொண்டத்தொகையுள் சங்கப்புலவரைத் துதித்தமையால் அவர்கள் காலத்துக்கு அவர் பிந்திய காலத்தவரென்பது தெளியக்கிடத்தலாலும் சங்கப்புலவர் காலமே ஔவையார் காலம் என்பது பொருந்தாதெனின், அவர் திருமூலநாயனார் போலவும் சேரமான்பெருமாணாயனார் போலவும் சிவயோக முதிர்ச்சியினால் நெடுங்காலம் வாழ்ந்தவரென்பவாகலின் பொருந்தாமை யாண்டையது தென்றொழிக. கம்பர் காலத்தௌவையும் இவரே என்பாரும் வேறு என்பாரும் உளர்.

இவர், "சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்" செவ்வனே செறித்துச் சொன்னயம் பொருணயம் முதலியன தோன்றச் செய்யுள் செய்யும் வன்மையின் மிகச்சிறந்தவர். திருவள்ளுவநாயனார் ஒரு விஷயத்தை இரண்டடியாற் கூறுவராயின் இவர் இரண்டு விஷயங்களை ஓரடியாற் கூறுவர்.

உதாரணம்:—

திருக்குறள்.

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்"

கொன்றைவேந்தன்.

"முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்."

இன்னா இனியவை இரண்டும் அடங்கின.

திருக்குறள்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்."

கொன்றைவேந்தன்.

"சான்றோ ரென்கை யீன்றோர்க் கழகு."

பிதா மாதா இருவரும் அடங்கினர்.

இன்னும் இவர் ஓரரும்பெருநூற் பொருண்முழுதும் ஒருசெய்யுளில் விளங்க அமைத்துப்பாடும் அத்துணை மிக நுண்ணிய கூர்ந்த மதியுடையர் என்பது, திருக்குறளிற் கூறப்பட்ட அறம், பொருள், இன்பம், வீடு என்னு நாற்பொருள்களையும் அமைத்து "ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொருளெஞ் ஞான்றும், காத லிருவர் கருத்தொன்றி—யாதரவு, பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும், விட்டதே பேரின்ப வீடு" என்று திருவள்ளுவநாயனாரை நோக்கி இவர் கூறிய வெண்பாவாலறிக.

"சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க், கபாயமொரு நாளுமில்லை." "சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு" "பால் புரை பிறைநுதற் பொலிந்த சென்னி, நீல மணிமிடற் றொரு வன் போல" எனவரும் அவர் திருவாக்குக்களால் அவர் சமயம் சைவம் என்பதும், "திருமாலுக் கடிமைசெய்" "தெய்வமிக ழேல்" "வையந்தோறுந் தெய்வந்தொழு" என்னுந் திருவாக் குக்களால், "புறச்சமய நெறி நின்று மகச்சமயம் புக்கும்" என்ற சிவஞானசித்தித் திருவிருத்தப் பொருளுக்கேற்ப ஆன்மாக்கள் பக்குவத்திற் கீடாக அவ்வச் சமயங்களில் உறைத்து நின்று செய்யும் பத்திவிசேடத்தால் மேன்மேற் சமயங்களை யடைந்து ஈற்றில் சைவசமயத்தை யடையவேண்டி யிருத்தலின் அவை யும் அமைக என்னுங் கருத்துடையர் என்பதும் வெள்ளிடை மலைபோற் றெள்ளிதிற் புலப்படும்.

இன்னும் இவர் சரித்திரத்துட் சில விஷயங்கள் சில புத்தகங்களில் விரித்து வேறுபடப் பதிப்பிக்கப்பட்டிருப்பி னும் அவற்றிற்குத்தக்க பிரமாணங்களில்லாமையால் அவற்றை யெல்லாம் ஈண்டுச் சேர்க்காமல் இவ்வளவில் நிறுத்துகின் றேன்.

பிரமாணத்தோடு காணப்படும் இவரது சரித்திர விரிவை அச்சிட விரும்பி யிருக்கின்றேனாதலால், வைத்திருக்கும் அன் பர்கள் தயைகூர்ந்து அனுப்புவார்களானல் உலோகோபகார மாக விருக்கும். அதன் பொருட்டுப் பொருளை விரும்பினுங் கொடுத்துப் பெற்றுக்கொள்ளுவேன்.

முற்றிற்று.

---

சுவாமிநாதபண்டிதர்.

உ

கணபதிதுணை

## ஔவையார் அருளிச்செய்த

# ஆத்திசூடி

மூலமும் உரையும்



## காப்பு

ஆத்திசூடி யமர்ந்த தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோ மியாமே.

## இதன்பொருள்

ஆத்தி — திருவாத்திப்பூமாலையை, சூடி — தரிப்பவராகிய சிவபெருமான், அமர்ந்த — விரும்பிய, தேவனை— பிள்ளையாகிய விநாயகக்கடவுளை, ஏத்தி ஏத்தி — துதித்துத் துதித்து, தொழுவோம் — வணங்குவோம், யாம்— நாங்கள் என்றவாறு.

தேவன் - பிள்ளை. ஏ ஈற்றசை.



## சூத்திரம்

க. அறஞ்செய விரும்பு.

அறம் — தருமத்தை, செய — செய்தற்கு, விரும்பு — நீ ஆசைகொள்ளு.

உ. ஆறுவது சினம்.

ஆறுவது — (உன்னுள்ளே) தணிய வேண்டுவது, சினம் — கோபமே ஆம்.

௩. இயல்வது கரவேல்.

இயல்வது – (கொடுப்பதற்கு) இசைவதை, கரவேல்– (நீ வறுமையினாலே இரப்பவர்களுக்கு) ஒளியாதே.

௪. ஈவது விலக்கேல்.

ஈவது – (தருமத்தைக் குறித்து ஒருவருக்கு ஒருவர்) கொடுப்பதை, விலக்கேல் – நீ தடுக்காதே.

௫. உடையது விளம்பேல்.

உடையது – (உனக்கு) உள்ள பொருளை, விளம்பேல் – (நீ பிறர் அறியும்படி) சொல்லாதே.

௬. ஊக்கமது கைவிடேல்.

ஊக்கமது – (செய்தொழிலில்) மனஞ்சோராமையை, கைவிடேல் – நீ கைவிடாதே.

௭. எண்ணெழுத் திகழேல்.

எண்*–கணிதநூலையும், எழுத்து – இலக்கணநூலையும், இகழேல் – நீ இகழ்ந்து தள்ளாதே. [புகழ்ந்துகல் என்பது கருத்து.]

கணிதம் - கணக்கு.

௮. ஏற்ப திகழ்ச்சி.

ஏற்பது – (ஒருவரிடத்திலே போய்) இரப்பது, இகழ்ச்சி – பழிப்பாகும்.

௯. ஐய மிட்டுண்.

ஐயம் – பிச்சையை, இட்டு – (இரப்பவர்களுக்குக்) கொடுத்து, உண் – நீயும் உண்ணு.

௧௦. ஒப்புர வொழுகு.

* "காண்டலனு மானங் கதையருத்தா பத்தியிவை-யீண்டிசைத்த வெண்ணெனவே யெண்." என்றார் பரமததிமிரபாநு நூலுடையார்.

ஒப்புரவு — உலகநடையை அறிந்து, ஒழுகு—(நீ அந்தவழியிலே) நட.

௧௧. ஓதுவ தொழியேல்.

ஓதுவது — (அறிவுநூல்களை) வாசிப்பதை, ஒழியேல்—(நீ மாணபரியந்தம்) விடாதே.

௧௨. ஔவியம் பேசேல்.

ஔவியம் — பொறாமை வார்த்தைகளை, பேசேல் — நீ பேசாதே.

௧௩. அஃகஞ் சுருக்கேல்.

அஃகம் — தானியவிலையை, சுருக்கேல் — (நீ அதிகலாபத்துக்காகக்) குறையாதே.

௧௪. கண்டொன்று சொல்லேல்.

கண்டு — (ஒன்றைக்) கண்டு, ஒன்று — வேறொன்றை, சொல்லேல் — (நீ சாக்ஷியாகும்போது) சொல்லாதே. [கண்டபடியே சொல்லென்பது கருத்து.]

௧௫. ஙப்போல் வளை.

ஙப்போல் — ஙகாரம் (தான் பிரயோசனமுள்ளதாய் இருந்து தன்வருக்கத்தைத்தழுவுதல்) போல, வளை — (நீ பிரயோசனமுள்ளவனாய் இருந்து உன் இனத்தைத்) தழுவு.

ஙகரமானது அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் என்று சொல்லுக்குக் காரணமாய் வரும். அதின் வருக்கங்களாகிய ஙா ஙி ஙீ ஙு ஙூ ஙெ ஙே ஙை ஙொ ஙோ ஙௌ என்கிற பதினொன்றும் சொல்லுக்குக் காரணமாதல் இல்லை. ஆயினும், ஙகரத்தின் பொருட்டு இவைகளையும் நெடுங்கணக்கிலே வழங்குவார்கள். அதுபோலவே, நீ கல்விசெல்வங்களினாலே பிறருக்கு உதவி செய்வாயாயின், அவர் உன்னைத் தழுவுவதன்றி உன்பொருட்டு உன் இனத்தாரையும் தழுவுவர் என்பதாம்

கசு. சனிநீ ராடு.

சனி — சனிக்கிழமைதோறும், நீர் ஆடு — (எண்ணெய் இட்டுக்கொண்டு) நீரிலே தலைமுழுகு.

புதன்கிழமையிலும் முழுகலாம்.

கஎ. ஞயம்பட வுரை.

ஞயம்பட — (பேசுஞ்சொல்லிலே) இன்பம் விளையும்படி, உரை — நீ பேசு.

நயம் என்பது ஞயம் எனப் போலியாயிற்று.

கஅ. இடம்பட வீடெடேல்.

இடம் — இடமானது, பட — (அளவுக்கு மேற்பட்டு வெறுமையாய்க்) கிடக்கும்படி, வீடு — வீட்டை, எடேல் — (நீ பெரிதாகக்) கட்டாதே.

கசு. இணக்கமறிந் திணங்கு.

இணக்கம் — சிநேகத்துக்கு ஏதுவாகிய (நற்குண நற்செய்கைகளை,) அறிந்து — தெளிந்து, இணங்கு — (பின் ஒருவனோடு) சிநேகஞ்செய்.

உ0. தந்தை தாய்பேண்.

தந்தை — (நீ உன்) பிதாவையும், தாய் — மாதாவையும், பேண் — (எப்போதும் பூசித்துக்) காப்பாற்று.

உக. நன்றி மறவேல்.

நன்றி — (ஒருவர் உனக்குச் செய்த) உபகாரத்தை, மறவேல் — (நீ ஒருபோதும்) மறவாதே.

உஉ. பருவத்தே பயிர்செய்.

பயிர் — பயிர்களை, பருவத்தே — (அது அது விளையும்) பக்குவகாலத்திலே, செய் — வேண்டும் முயற்சியிலே வழுவாமல்) இடு.

பயிருக்குவேண்டும் முயற்சிகளாவன, உழுதல், எரு இடுதல், களைபிடுங்குதல், நீர் பாய்ச்சல், காத்தல் என்கிற ஐந்தும் ஆம்.

உ௩. மன்றுபறித் துண்ணேல்.*

மன்று – தருமசபையிலே இருந்துகொண்டு, பறித்து – (வழக்குத்தீர்ப்புக்குவரும் குடிகளுடைய பொருளைக்) கவர்ந்து, உண்ணேல் – நீ சீவனம்பண்ணாதே.

உ௪. இ, யல்பலாதன செய்யேல்.

இயல்பு அலாதன – (தருமநூலுக்குப்) பொருத்தமல்லாதவைகளை, செய்யேல் – நீ செய்யாதே.

உ௫. அ, ரவ மாட்டேல்.

அரவம் – (நஞ்சையுடைய) பாம்புகளை, ஆட்டேல் – (நீ பிடித்து,) ஆட்டாதே.

உ௬. இ, லவம்பஞ் சிற்றுயில்.

இலவம் பஞ்சில் – இலவம்பஞ்சு மெத்தையிலே, துயில் – நீ நித்திரைசெய்.

உ௭. வஞ்சகம் பேசேல்.

வஞ்சகம் – கபடவார்த்தைகளை, பேசேல் – நீ பேசாதே.

உ௮. அ, ழகலா தனசெய்யேல்.

அழகு அலாதன – (நீ துன்பப்படவந்த காலத்தும்) இழிவுள்ள செயல்களை, செய்யேல் – செய்யாதே.

அழகுடையன உயர்வுள்ள செயல்கள் ஆதலால், அழகலாதன இழிவுள்ள செயல்கள் என்பதாம்.

உ௯. இ, ளமை யிற்கல்.

---

* பொது இடங்களைக் கவர்ந்து நீ சீவனம்பண்ணாதே என்பதும் ஒருபொருள். மண்பறித் துண்ணேல் என்றும் பாடங் கொள்வர்.

இளமையில் — இளமைப் பிராயத்திலே, கல் — (நீ வித்தையைக்) கற்றுக்கொள்.

௩௦. அ, றனை மறவேல்.

அறனை — தருமத்தை, மறவேல் — (நீ ஒருபோதும்) மறவாதே.

௩௧. அ, னந்த லாடேல்.

அனந்தல் — நித்திரையை, ஆடேல் — (நீ அதிகமாகச்) செய்யாதே.

௩௨. கடிவது மற.

கடிவது — (ஒருவரைச்) சினந்து பேசுவதை, மற — நீ மறந்துவிடு.

௩௩. காப்பது விரதம்.

காப்பது — (உயிர்களுக்குத் தீங்கு செய்யாமல் அவைகளைக்) காப்பாற்றுவதே, விரதம் — விரதமாம்.

௩௪. கிழமைப் படவாழ்.

கிழமைப்பட — (உன்னிடத்தில் உள்ள பொருள் பிறருக்கும்) உரிமைப் படும்படி, வாழ் — நீ வாழு.

௩௫. கீழ்மை யகற்று.

கீழ்மை — கீழ்மையாகிய குணத்தை, அகற்று — நீ நீக்கு.

௩௬. குணமது கைவிடேல்.

குணமது — (மேலாகிய) குணத்தை, கைவிடேல் — நீ கைவிடாதே.

௩௭. கூடிப் பிரியேல்.

கூடி — (நல்லவரோடு) சினேகித்து, பிரியேல் — (நீ பின் அவரை விட்டு) நீங்காதே.

௩அ. கெடுப்ப தொழி.

கெடுப்பது — பிறருக்குக் கேடுசெய்வதை, ஒழி — நீ விட்டுவிடு.

௩௯. கேள்வி முயல்.

கேள்வி — (கற்றவர் சொல்லும் நூற்பொருளைக்) கேட்பதற்கு, முயல் — நீ முயற்சி செய்.

௪0. கைவினை கரவேல்.

கைவினை — (உனக்குத் தெரிந்த) கைத்தொழிலை, கரவேல் — (நீ சமயத்திலே) ஒளியாதே.

௪௧. கொள்ளை விரும்பேல்.

கொள்ளை — (பிறருடைய பொருளைக்) கொள்ளையிடுதற்கு, விரும்பேல் — நீ ஆசைப்படாதே.

௪௨. கோதாட் டொழி.

கோது — குற்றம் பொருந்திய, ஆட்டு — விளையாட்டை, ஒழி — நீ நீக்கு.

௪௩. சக்கர நெறிநில்.

சக்கர நெறி — (அரசனுடைய ஆஞ்ஞையாகிய) சக்கரம் செல்லும் வழியிலே, நில் — (நீ அடங்கி) நில். [அரசனுடைய கட்டளைக்கு அமைந்து நட என்பது கருத்து.]

௪௪. சான்றோ ரினத்திரு.

சான்றோர் — அறிவினாலே நிறைந்தவர்களுடைய, இனத்து — கூட்டத்திலே, இரு — (நீ எந்நாளும் சேர்ந்து) இரு.

௪௫. சித்திரம் பேசேல்.

சித்திரம் — மெய்போலத் தோன்றும் பொய்மொழிகளை, பேசேல் — நீ பேசாதே.

சசு. சீர்மை மறவேல்.*

சீர்மை — புகழுக்கு ஏதுவாகிய குணத்தை, மறவேல் — நீ மறந்து விடாதே.

சஎ. சுளிக்கச் சொல்லேல்.

சுளிக்க — (கேட்பவர்) கோபிக்கும்படியாக, சொல்லேல் — (நீ ஒன்றையும்) பேசாதே.

சஅ. சூது விரும்பேல்.

சூது — சூதாடலை, விரும்பேல் — (நீ ஒருபோதும்) விரும்பாதே.

சகூ. செய்வன திருந்தச்செய்.

செய்வன — செய்புங்காரியங்களை, திருந்த — செவ்வையாக, செய் — நீ செய்.

ரு0. சேரிட மறிந்துசேர்.

சேர் இடம் — அடையத்தகும் (நன்மையாகிய) இடத்தை, அறிந்து — தெரிந்து, சேர் — நீ அடை.

ருக. சையெனத் திரியேல்.

சை என — (பெரியோர் உன்னைச்) சீ என்று அருவருக்கும்படி, திரியேல் — (நீ துட்டனாய்த்) திரியாதே.

ருஉ. சொற்சோர்வு படேல்.

சொல் — (நீபிறரோடு பேசும்) சொற்களிலே, சோர்வு படேல் — மறதிபடப் பேசாதே. [சொல்லவேண்டுவதை மறவாமற்சொல் என்பது கருத்து.]

---

* சிறப்பான காரியங்களை நீ மறந்துவிடாதே என்றும் பொருள் கூறலாம்.

ருங. சோம்பித் திரியேல்.

சோம்பி — (நீ செய்யவேண்டும் முயற்சியைச் செய் யாமல்) சோம்பல்கொண்டு, திரியேல் — (வீணாகத் திரியாதே.

ருச. தக்கோ னெனத்திரி.

தக்கோன் என — (உன்னைப் பெரியோர்கள்) யோக் கியன் என்று புகழும்படி, திரி — நீ நட.

ருரு. தானமது விரும்பு.

தானமது — (சற்பாத்திரங்களிலே) தானம் செய்தலை, விரும்பு — நீ ஆசைகொள்ளு.

ருசு. திருமாலுக் கடிமைசெய்.

திருமாலுக்கு — விஷ்ணுவுக்கு, அடிமை செய் — நீ தொண்டு பண்ணு.

ருஎ. தீவினை யகற்று.

தீவினை — பாவச்செயல்களை, அகற்று — (நீ எப்பொ ழுதுஞ் செய்யாமல்) நீக்கு.

ருஅ. துன்பத்திற் கிடங்கொடேல்.

துன்பத்திற்கு — (தொழில்செய்யும்போது முயற்சி யினாலே வரும் சரீரப் பிரயாசத்தால் ஆகிய) துன் பத்துக்கு, இடம் கொடேல் — (நீ சிறிதாயினும்) இடங் கொடாதே. [அத்துன்பத்தை இன்பமென்று கொண்டு முயற்சியை விடாது செய் என்பது கருத்து.]

ருகூ. தூக்கி வினைசெய்.

தூக்கி — (முடிக்கும் உபாயத்தை) ஆராய்ந்து, வினை— ஒருதொழிலை, செய் — (நீ அதன்பின்பு) செய்.

கூ0. தெய்வ மிகழேல்.

தெய்வம் — கடவுளை, இகழேல் — (நீ மறந்தாயினும்) இகழாதே.

௩௧. தேசத்தோ டொத்துவாழ்.

தேசத்தோடு — (நீவசிக்கும்) தேசத்திலுள்ளவர்களுடனே, ஒத்து — (பகையில்லாமல்) ஒத்து, வாழ்—வாழு.

௩௨. தையல்சொற் கேளேல்.

தையல் — (உன்) மனைவியுடைய, சொல் — சொல்லை, கேளேல் — நீ கேட்டு நடவாதே.

௩௩. தொன்மை மறவேல்.

தொன்மை — பழமையாகிய சிநேகத்தை, மறவேல்— நீ மறந்து விடாதே.

௩௪. தோற்பன தொடரேல்.

தோற்பன — தோல்வியடையக் கூடிய வழக்குக்களிலே, தொடரேல் — நீ சம்பந்தப்படாதே.

௩௫. நன்மை கடைப்பிடி.

நன்மை — புண்ணியத்தையே, கடைப்பிடி—(நீ எந்நாளும் விடாமல்) உறுதியாகப் பற்றிக்கொள்.

௩௬. நாடொப் பனசெய்.

நாடு — உன் நாட்டில் உள்ளோர் பலரும், ஒப்பன — ஒத்துக்கொள்ளத்தக்க நல்ல காரியங்களை, செய் — நீ செய்.

௩௭. நிலையிற் பிரியேல்.

நிலையில் — (நீ நிற்கின்ற உயர்ந்த) நிலையிலே நின்று, பிரியேல் — (ஒருபோதும்) நீங்காதே.

௩௮. நீர்விளை யாடேல்.

நீர் — (ஆழம் உள்ள) நீரிலே, விளையாடேல் — (நீ நீந்தி) விளையாடாதே.

௬௯. நுண்மை நுகரேல்.

நுண்மை – (நோயைத் தருகிற) சிற்றுண்டிகளை, நுகரேல் – நீ உண்ணாதே.

௭0. நூல்பல கல்.

நூல் பல – (அறிவை வளர்க்கிற) நூல்கள் பலவற்றையும், கல் – (நீ மரணபரியந்தம்) படி.

௭௧. நெற்பயிர் விளை.

நெற்பயிர் – நெல்லுப்பயிரை, விளை – (நீ வேண்டிய முயற்சிசெய்து) உண்டாக்கு.

௭௨. நேர்பட வொழுகு.

நேர்பட – (உன் ஒழுக்கம் கோணாமல்) செவ்வைப்பட, ஒழுகு – நீ நட.

௭௩. நைவினை நணுகேல்.*

நை – (பிறர்) கெடத்தக்க, வினை – தீவினைகளை, நணுகேல் – (நீ ஒருபோதும்) சாராதே.

௭௪. நொய்ய வுரையேல்.

நொய்ய – (பயன் இல்லாத) அற்பவார்த்தைகளை, உரையேல் – (நீ ஒருபோதும்) சொல்லாதே.

௭௫. நோய்க் கிடங்கொடேல்.

நோய்க்கு–வியாதிகளுக்கு, இடங்கொடேல்–(அவபத்தியம் முதலானவைகளைச்செய்து) இடங்கொடாதே.

௭௬. பழிப்பன பகரேல்.

பழிப்பன – (அறிவுடையவர்களாலே) பழிக்கப்படுவனவாகிய இழிசொற்களை, பகரேல் – நீ பேசாதே.

இழிசொற்களாவன பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்கிற நான்குமாம்.

---

* நைவன நணுகேல் என்றும் பாடங்கொள்வர்.

எஎ. பாம்பொடு பழகேல்.

பாம்பொடு — (பால்கொடுத்தவருக்கும் விஷத்தைக் கொடுக்கிற) பாம்பைப் போல்பவர்களுடனே, பழகேல் — நீ சகவாசஞ் செய்யாதே.

எஅ. பிழைபடச் சொல்லேல்.

பிழைபட — வழுக்கள் உண்டாகும்படி, சொல்லேல் — (நீ ஒன்றையும்) பேசாதே.

எகூ. பீடு பெறநில்.

பீடு — பெருமையை, பெற — பெறும்படியாக, நில்— (நீ நல்லவழியிலே) நில்.

அ௦. புகழ்ந்தாரைப் போற்றிவாழ்.

புகழ்ந்தாரை — உன்னைத் துதிசெய்து அடுத்தவரை, போற்றி — (கைவிடாமற்) காப்பாற்றி, வாழ் — நீ வாழு.

அக. பூமி திருத்தியுண்.

பூமி — உன் விளைநிலத்தை, திருத்தி — சீர்திருத்திப் பயிர்செய்து, உண் — நீ உண்ணு.

அஉ. பெரியாரைத் துணைக்கொள்.

பெரியாரை — (அறிவிலே சிறந்த) பெரியோரை, துணைக்கொள்-நீ உனக்குத் துணையாகப்பேணிக்கொள்.

அங. பேதைமை யகற்று.

பேதைமை — (பிறவிக்குக்காரணமாகிய) அஞ்ஞானத்தை, அகற்று —(நீ மெய்ஞ்ஞானத்தினாலே) போக்கு.

அச. பையலோ டிணங்கேல்.

பையலோடு — சிறுபிள்ளையோடு, இணங்கேல் — நீ கூடாதே.

அரு. பொருடனைப் போற்றிவாழ்.

பொருள் தனை — திரவியத்தை, போற்றி — (மேன் மேலும் உயரும்படி) காத்து, வாழ் — நீ வாழு.

அகூ. போர்த்தொழில் புரியேல்.

போர் — சண்டையாகிய, தொழில் — தொழிலை, புரியேல் — நீ செய்யாதே.

அஎ. மனந்தடு மாறேல்.

மனம் — மனசு, தடுமாறேல் — (நீயாதொருவிஷயத்திலும்) கலங்காதே.

அஅ. மாற்றானுக் கிடங்கொடேல்.

மாற்றானுக்கு — பகைவனுக்கு, இடம் கொடேல் — (உன்னை நெருக்கிப் பின் வருத்தும்படியாக நீ) இடங் கொடாதே.

அகூ. மிகைபடச் சொல்லேல்.

மிகை பட — (சொற்கள் சுருங்காமல்) அதிகப்படும் படி, சொல்லேல் — நீ சொல்லாதே.

கூ0. மீதூண் விரும்பேல்.

மீது ஊண் — அதிகபோசனத்துக்கு, விரும்பேல் — நீ ஆசைப்படாதே.

கூக. முனைமுகத்து நில்லேல்.

முனை முகத்து — சண்டைமுகத்திலே, நில்லேல் — (நீ போய்) நில்லாதே.

கூஉ. மூர்க்கரோ டிணங்கேல்.

மூர்க்கரோடு* — அறிவில்லாதவர்களுடனே, இணங் கேல் — நீ சிநேகம் பண்ணாதே.

---

* "மூர்க்கரும் முதலையுங் கொண்டது விடா" என்றதனால் மூர்க்கர் பிடிவாதக்காரருமாம்.

கூங. மெல்லினல்லா டோள்சேர்.*

மெல் — மெல்லிய, இல் — (உன்) மனையாட்டியாகிய, நல்லாள் — பெண்ணினுடைய, தோள் — தோள்களையே, சேர் — நீ புணர்.

இதனாலே, பிறர்மனைவியர் பரத்தையர் என்கிற இவர்களுடைய தோள்களை ஒருபோதும் புணராதே என்பது பெறப்படும்.

கூச. மேன்மக்கள் சொற்கேள்.

மேன்மக்கள் — மேன்மையாகிய மனிதருடைய, சொல் — சொல்லை, கேள் — (நீ கேட்டு) நட.

கூரு. மைவிழியார் மனையகல்.

மை விழியார் — மைதீட்டியகண்களையுடைய வேசிகளது, மனை — வீட்டை, அகல் — (நீ ஒருபோதும் கிட்டாமல்) அகன்று போ.

கூசு. மொழிவ தறமொழி.

மொழிவது — சொல்லப்படும்பொருளை, அற — (சந்தேகம்) நீங்கும்படி, மொழி — நீ சொல்லு.

கூஎ. மோகத்தை முனி.†

மோகத்தை — (நிலையாத பொருள்களின் மேலதாகிய) ஆசையை, முனி — நீ வெறுத்து விலக்கு.

கூஅ. வல்லமை பேசேல்.

வல்லமை — (உன்னுடைய) சாமர்த்தியத்தை, பேசேல் — (நீ புகழ்ந்து) பேசாதே.

---

* "மெல்லியா டோள்சேர்." என்றபாடம் பொதுப்படப் பெண்ணை உணர்த்தலாற் சிறப்பின்று. † மோசம் காமம் என்பன விருப்பத்தின் பரியாயநாமங்கள் என்பதை "***காம-மிச்சை பெட்பு மோக மேட்டை" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலறிக.

கூகூ. வாதுமுற் கூறேல்.

வாது – வாதுகளை, முன் – (பெரியோர்) முன்னே, கூறேல் – நீ பேசாதே.

க00. வித்தை விரும்பு.

வித்தை – கல்விப்பொருளையே, விரும்பு – நீ ஆசை கொள்ளு.

க0க. வீடு பெறநில்.

வீடு – மோக்ஷத்தை, பெற – அடையும்படி, நில் – (அதற்குரிய ஞானவழியிலே) நில்.

க0உ. உத்தம னாயிரு.

உத்தமனாய் – (நற்குண நற்செய்கைகளினாலே எல்லாரினும்) மேலானவனாகி, இரு – நீ இரு.

க0௩. ஊருடன் கூடிவாழ்.

ஊருடன் – ஊரவர்களுடனே, கூடி – (சுபாசுபகன்மங்களிலே) அளாவி, வாழ் – நீ வாழு.

க0ச. வெட்டெனப் பேசேல்.

வெட்டு என – கத்திவெட்டைப்போல, பேசேல் – (நீ ஒருவரோடுங் கடினமாகப்) பேசாதே.

க0ரு. வேண்டி வினைசெயேல்.

வேண்டி – (யாதொரு பிரயோசனத்தை) விரும்பி, வினை – தீவினையை, செயேல் – (நீ ஒருவருக்கும்) செய்யாதே.

க0சு. வைகறைத் துயிலெழு.

வைகறை – (நீ தினந்தோறும்) விடியற்காலத்திலே, துயில் – நித்திரையை விட்டு, எழு – எழுந்திரு.

க0எ. ஒன்னாரைத் தேறேல்.*

ஒன்னாரை – பகைவர்களை, தேறேல் – (நீ ஒருபோதும்) நம்பாதே.

க0அ. ஓரஞ் சொல்லேல்.

ஓரம் – பக்ஷபாதத்தை, சொல்லேல் – (நீ யாதொரு வழக்கிலும்) பேசாதே.

ஆத்திசூடியுரை முற்றிற்று.



உ

ஒளவையார் அருளிச்செய்த

# கொன்றைவேந்தன்

## மூலமும் உரையும்



## காப்பு

கொன்றை வேந்தன் செல்வ னடியிணை
என்று மேத்தித் தொழுவோ மியாமே.

## இதன்பொருள்

கொன்றை – கொன்றைப்பூமாலையைச் சூடிய, வேந்தன் – சிவபெருமானுக்கு, செல்வன் – குமாரராகிய விநாயகக்கடவுளுடைய, அடி இணை – பாதங்களிரண்டையும், என்றும் – எந்நாளும், ஏத்தி – துதிசெய்து, தொழுவோம் – வணங்குவோம், யாம் – நாங்கள் என்றவாறு. ஏகாரம் ஈற்றசை.

* தேறேல் என்பதைச் சேரேல் எனப் பாடங்கொள்வாருமுளர்.

## சூத்திரம்

க. அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்.

அன்னையும் — தாயும், பிதாவும் — தகப்பனும், முன்— முன்னே, அறி — காணப்பட்ட, தெய்வம் — தெய்வங்களாவார்.

உ. ஆலயந் தொழுவது சாலவு நன்று.

ஆலயம் — கோயிலுக்குப்போய், தொழுவது — கடவுளை வணங்குவது, சாலவும் — மிகவும், நன்று — நல்லது.

ந. இல்லற மல்லது நல்லற மன்று.

இல்லறம் — (மனையாளோடு கூடிச் செய்யும்) இல்லறமானது, நல் அறம் — எளிதிற் செய்யத்தகும் அறமாகும், அல்லது — இல்லறமல்லாத துறவறமானது, அன்று — எளிதிற்செய்யத்தகும் அறமன்றாகும்.

ச. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.

ஈயார் — கொடாதவருடைய, தேட்டை — சம்பாத்தியத்தை, தீயார் — (கள்ளர் முதலாகிய) தீயவர், கொள்வர் — அபகரிப்பார்.

ரு. உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு.

உண்டி — போசனம், சுருங்குதல் — (அளவிற்) குறைதல், பெண்டிர்க்கு—பெண்டுகளுக்கு, அழகு—அழகாகும்.

சு. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.

ஊருடன் — (தான் இருக்கும்) ஊராருடன், பகைக்கின் — (ஒருவன்) விரோதித்தால், வேருடன் — (தன்) வமிசத்துடன், கெடும் — (அவன்) கெடுவான்.

எ. எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்.

எண்ணும் — கணிதநூலும், எழுத்தும் — இலக்கணநூலும், கண் எனத் தகும் — (மனிதருக்கு) இரண்டு கண்களென்று சொல்லப்படும்.

அ. ஏவா மக்கண் மூவா மருந்து.

ஏவா — (பெற்றவர் இதைச் செய் என்று) ஏவுதற்கு முன் குறிப்பறிந்து செய்கிற, மக்கள் — பிள்ளைகள், மூவா மருந்து — (அப்பெற்றவருக்குத்) தேவாமிர்தம் போல்வார்.

கூ. ஐயம் புகினுஞ் செய்வன செய்.

ஐயம் புகினும் — பிச்சையெடுத்தாலும், செய்வன — செய்யத்தகுங் கருமங்களையே, செய்—(நீ விடாது) செய்.

க0. ஒருவனைப் பற்றி யோரகத் திரு.*

ஒருவனை — (நற்குணமுடைய) ஒருவனை, பற்றி — (துணையாகப்) பற்றிக்கொண்டு, ஓரகத்து — ஓரிடத்திலேதானே, இரு — (நீ எப்போதும்) வாசம்பண்ணு.

கக. ஓதலி னன்றே வேதியர்க் கொழுக்கம்.

வேதியர்க்கு — பிராமணருக்கு, ஒழுக்கம் — ஆசாரமானது, ஓதலின் — (வேதம்) ஓதலினும், நன்றே — நல்லதே.

கஉ. ஔவியம் பேசுத லாக்கத்திற் கழிவு.

ஔவியம் — பொறாமை வார்த்தைகளை, பேசுதல் — (ஒருவன்) பேசுதல், ஆக்கத்திற்கு — (அவன்) செல்வத்திற்கு, அழிவு கேட்டைத் தருவதாகும்.

---

* இதற்கு, (நற்குணமுடைய) ஒருகணவனை விவாகஞ்செய்து துணையாகப்) பற்றிக்கொண்டு ஓரில்லத்திலேதானே (நீ எப்பொழுதும்) வாசம்பண்ணு எனப் பெண்ணை நோக்கிக் கூறினதாகவும் பொருள் கொள்வாருமுளர்.

கங. அஃகமுங் காசுஞ் சிக்கெனத் தேடு.

அஃகமும் — தானியத்தையும், காசும் — திரவியத்தையும், சிக்கெனத் தேடு — நீ வீண்செலவுசெய்யாமற் சம்பாதி.

கச. கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை.

கற்பு எனப்படுவது — (பெண்களுக்குக்) கற்பென்று சொல்லப்படுவது, சொல் — (கணவர்) சொல்லுக்கு, திறம்பாமை — தப்பி நடவாமையாம்.

கரு. காவ லானே பாவையர்க் கழகு.

காவல் தானே — (கற்புக்கு அழிவு வாராமல் தம்மைக்) காத்துக்கொள்வது தானே, பாவையர்க்கு — பெண்களுக்கு, அழகு — அழகாகும்.

கசு. கிட்டா தாயின் வெட்டென மற.

கிட்டாது ஆயின் — (இச்சித்த ஒருபொருள்) கிடையாதானால், வெட்டென — சீக்கிரத்திலேதானே, மற — (அப்பொருளை) மறந்துவிடு.

கஎ. கீழோ ராயினுந் தாழ வுரை.

கீழோர் ஆயினும் — (கேட்பவர் உனக்குக்) கீழ்ப்பட்டவராய் இருந்தாலும், தாழ — (உன்சொல்) வணக்கமுடைதயாய் இருக்கும்படி, உரை — (நீ அவருடன்) பேசு.

கஅ. குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை.

குற்றம் — குற்றங்களை, பார்க்கின் — (ஆராய்ந்து) பார்த்தால், சுற்றம் — உறவாவோர், இல்லை — (ஒருவரும்) இல்லை.

கக. கூரம் பாயினும் வீரியம் பேசேல்.

கூர் அம்பு ஆயினும் – (உன்கையிலிருக்கிறது) கூர்மைபொருந்திய அம்பானாலும், வீரியம் – வீரத்தன்மையை, பேசேல் – (நீ வீணாகப்) பேசாதே.

௨0. கெடுவது செய்யின் விடுவது கருமம்.

கெடுவது – கெடுவதை, செய்யின் (தன்சினேகன்) செய்தால், விடுவது – (அவன்சினேகத்தை) விடுவதே, கருமம் – (விவேகிக்கு) நற்செய்கையாம்.

௨க. கேட்டி லுறுதி கூட்டு முடைமை.

கேட்டில்–(கைப்பொருள்) இழந்தகாலத்தில், உறுதி – மனந்தளராமை, உடைமை – முன் போல அப்பொருளுடையனுந்தன்மையை, கூட்டும் – சேர்க்கும்.

௨௨. கைப்பொரு டன்னின் மெய்ப்பொருள் கல்வி.

கைப்பொருள் தன்னின் – கையிலிருக்கிற பொருளைப்பார்க்கினும், மெய்ப்பொருள் – மெய்ப்பொருளாவது, கல்வி – கல்வியேயாம்.

௨௩. கொற்றவ னறித லுற்றிடத் துதவி.

கொற்றவன் – அரசனானவன், அறிதல் – (ஒருவனை) அறிந்திருத்தல், உற்ற இடத்து – (அவனுக்கு ஆபத்து) வந்த இடத்து, உதவி – உதவியாகும்.

௨௪. கோட்செவிக் குறளை காற்றுட னெருப்பு.

கோட்செவி – கோள்கேட்கும் குணத்தோனுடைய காதிலே, குறளை – (பிறர்மேல் ஒருவன் வந்துசொன்ன)

கோளானது, காற்றுடன் - காற்றுடன் சேர்ந்த, நெருப்பு - நெருப்பைப்போல மூளும்.

உரு. கௌவை சொல்லி னெவ்வருக்கும் பகை.

கௌவை - (பிறர்மேலே) பழிச்சொல்லுகளை, சொல்லின் - (ஒருவன்) சொல்லினால், எவ்வருக்கும், எல்லாருக்கும், பகை - (அவன்) பகையாவான்.

உசு. சந்ததிக் கழகு வந்தி செய்யாமை.

சந்ததிக்கு - தன் வமிசம் பெருகுதற்கு, அழகு - அழகாவது, வந்தி - மலடியாக, செய்யாமை - செய்யாமல் (தன்மனையாளோடு) கூடி வாழ்தலாம்.

உஎ. சான்றோ ரென்கை யீன்றோட் கழகு. *

சான்றோர் என்கை - (தன்புத்திரரைக் கல்வியறிவால்) நிறைந்தோர் என்று (கற்றவர்) சொல்லுகிறது, ஈன்றோட்கு - பெற்றவளுக்கு, அழகு - அழகாகும்.

உஅ. சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு.

சிவத்தை - (முதற்பொருளாகிய) பரமசிவத்தை, பேணின் - (ஒருவன்) வழிபட்டால், தவத்திற்கு - (அவன் செய்யுந்) தவத்திற்கு, அழகு - அழகாகும்.

உகூ. சீரைத் தேடி னேரைத் தேடு.

சீரை - சௌக்கியத்தை, தேடின் - (உனக்குத்) தேடுவாயானால், ஏரை - பயிரிடுந்தொழிலை, தேடு - நீ தேடிக்கொள்ளு.

௩0. சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்.

---

* ஈன்றோர்க்கு எனப்பாடங்கொள்ளுவாருமுளர்.

சுற்றத்திற்கு — உறவினருக்கு, அழகு — அழகாவது, சூழ — (சுபாசுபங்களிலே பலரும் வந்து) சூழ, இருத்தல் — (சமீபங்களிலே) குடியிருக்கையாகும்.

ஙக. சூதும் வாதும் வேதனை செய்யும்.

சூதும்—சூதாடுதலும், வாதும்—தருக்கம்பேசுதலும், வேதனை — வருத்தத்தை, செய்யும் — உண்டாக்கும்.

ஙஉ. செய்தவ மறந்தாற் கைதவ மாளும்.

செய்தவம் — செய்புந்தவத்தை, மறந்தால் — (ஒருவன்) மறந்தால், கைதவம் — பொய்யாகிய அஞ்ஞானமானது, ஆளும் — (அவனை அடிமைகொண்டு) ஆளும்.

ஙங. சேமம் புகினும் யாமத் துறங்கு.

சேமம் — காவற்கூடத்திலே, புகினும் — போய் (ஒரு வேலையும் இல்லாமல்) இருந்தாலும், யாமத்து—எழரை நாழிகைக்குப்பின், உறங்கு — நீ நித்திரை பண்ணு.

ஙச. சையொத் திருந்தா லையமிட் டுண்.

சை ஒத்து இருந்தால் — பொருள் ஒத்திருந்தால், ஐயம் இட்டு — பிச்சை இட்டு, உண் — நீயும் உண்ணு.

சை — பொருள்.

ஙரு. சொக்க ரென்பவ ரத்தம் பெறுவர்.

சொக்கர் என்பவர் — பொன்னுடையவர் என்றுசொல்லப்படுவோர், அத்தம் — (அறமும் இன்பமுமாகிய மற்றைப்) புருஷார்த்தங்களையும், பெறுவர் — பெறுவார்.

சொக்கு — பொன்.

ஙசு. சோம்ப ரென்பவர் தேம்பித் திரிவர்.

சோம்பர் என்பவர் — சோம்பலுடையவர் என்று

சொல்லப்படுவோர், தேம்பி — (வறுமையினால்) வருந்தி, திரிவர் — (இரந்து) திரிவார்.

ருஎ. தந்தைசொன் மிக்க மந்திர மில்லை.

தந்தை — பிதாவினுடைய, சொல் — சொல்லுக்கு, மிக்க — மேற்பட்ட, மந்திரம் — (பலனைத்தரும்) மந்திரமானது, இல்லை — (ஒருவனுக்கு எந்தநூலிலும்) இல்லை.

ருஅ. தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை.

தாயின் — மாதாவைப் பார்க்கிலும், சிறந்த—சிறப்புப் பொருந்திய, ஒருகோயிலும் — ஒரு ஆலயமும், இல்லை — (ஒருவனுக்கு எங்கும்) இல்லை.

ருகூ. திரைகட லோடியுந் திரவியந் தேடு.

திரை கடல் — அலைகின்ற கடலிலே, ஓடியும் — (தோணியேறித் தூரதேசங்களிற்) போயானாலும், திரவியம் — திரவியத்தை, தேடு — நீ சம்பாதி.

சo. தீராக் கோபம் போரா முடியும்.

தீரா — நீங்காத, கோபம் — கோபமானது, போரா— (பின்பு) சண்டையாக, முடியும் — முடிந்துவிடும்.

சக. துடியாப் பெண்டிர் மடியி னெருப்பு.

துடியா — (தங்கணவருக்குத் துன்பம் வந்தபோது) மனம் பதையாத, பெண்டிர் — பெண்கள், மடியில் — (அவர்) வயிற்றில், நெருப்பு — அக்கினிக்கு ஒப்பாவார்.

சஉ. தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்.

தூற்றும் — (தங்கணவர்மேற் குற்றஞ்சொல்லித்) தூற்றுகிற, பெண்டிர் — பெண்களை, கூற்று எனத் தகும் — (அவருக்கு) இயமன் என்று எண்ணத்தகும்.

சரு. தெய்வஞ் சீறிற் கைதவ மாளும்.

தெய்வம் – தெய்வமானது, சீறின் – (ஒருவனைக்) கோபித்தால், கைதவம் – (அவனுக்குக்) கைகூடியிருந்த தவமும், மாளும் – (பயன்கொடாமல்) அழியும்.

சச. தேடா தழிக்கிற் பாடா முடியும்.

தேடாது – (ஒருவன் வருந்திச்) சம்பாதியாமல், அழிக்கின் – (இருக்கிறபொருளைச்) செலவழித்தால், பாடாமுடியும்–(அவனுக்குப் பின்) வருத்தமாக முடியும்.

சரு. தையு மாசியும் வையகத் துறங்கு.

தையும் – தைமாதத்திலும், மாசியும் – மாசிமாதத்திலும், வை அகத்து – (பனிவருத்தந்தாராத) வைக்கோல்வீட்டிலே, உறங்கு – நீ நித்திரைபண்ணு.

சசு. தொழுதூண் சுவையி னுழுதூ ணினிது.

தொழுது – (ஒருவரைச்) சேவித்து, ஊண் – உண்ணும் உணவினது, சுவையின் – சுவையைப்பார்க்கிலும், உழுது – உழுது பயிர்செய்து, ஊண்–உண்ணும் உணவின்சுவை, இனிது – இன்பந்தருவதாகும்.

சஎ. தோழ னோடு மேழைமை பேசேல்.

தோழனோடும் – (உன்) சிநேகனோடாயினும், ஏழைமை – (உனக்கு இருக்கிற) சிறுமையை, பேசேல் – (நீ எப்படிப்பட்ட வேளையிலும்) பேசாதே.

சஅ. நல்லிணக்க மல்ல தல்லற் படுத்தும்.

நல் இணக்கம் அல்லது – நல்ல சகவாசம் அல்லாதது, அல்லல் – துன்பத்தையே, படுத்தும் – உண்டாக்கும்.

சகூ. நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை.

நாடு எங்கும் - தேசமெங்கும், வாழ - செழித்திருக்குமாயின், கேடு ஒன்றும் - (திருட்டு முதலாகிய) கேடொன்றும், இல்லை - இல்லை.

ருo. நிற்கக் கற்றல் சொற்றிறம் பாமை.*

நிற்க - (தன்னிடத்தே) நிலைபெறும்படி, கற்றல்-கற்றலாவது, சொல்-(தான் சொல்லும்) சொல்லுகளிலே, திறம்பாமை - (ஒருபோதும்) தப்பிப்போகாமையாம்.

ருக. நீரகம் பொருந்திய வூரகத் திரு.

நீர் - நீர்வளமானது, அகம் - தனக்குள்ளே, பொருந்திய - (மழையில்லாத பஞ்சத்திலும்) அமைந்த, ஊரகத்து - ஊரினிடத்திலே, இரு - நீ குடியிரு.

ருஉ. நுண்ணிய கருமமு மெண்ணித் துணி.

நுண்ணிய - சிறிய, கருமமும் - தொழிலையும், எண்ணி - (முடிக்கும் வழியை நன்றாக) ஆலோசித்து, துணி - (நீ பின்பு அதைச் செய்யத் துணி.)

ருங. நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு.

நூல் - தருமநூலிலே சொல்லப்பட்ட, முறை - (விதிகளின்) முறையை, தெரிந்து - அறிந்து, சீலத்து- நல்லொழுக்கவழியில், ஒழுகு - நீ நட.

ருச. நெஞ்சை யொளித்தொரு வஞ்சக மில்லை.

நெஞ்சை-(தம்முடைய) மனசுக்கு, ஒளித்த-மறைக்

* ஒருவன் தான் சொல்லும் சொல்லுகளிலே (ஒருபோதும்) தப்பிப்போகாமை, தன்னிடத்திலே நிலைபெறும்படி கற்கக்கடவன். எனவும் பொருள்கொள்ளுவாருமுளர். கற்றல் - வியங்கோள்.

கப்பட்ட, ஒருவஞ்சகம் — யாதொருவஞ்சனையும், இல்லை — (யாவரிடத்திலும்) இல்லை.

ருரு. நேரா நோன்பு சீரா காது.

நேரா — (மனசினால்) உடன்படாத, நோன்பு — தவமானது, சீர் ஆகாது — சீராக முடியாது.

ருசு. நைபவ ரெனினு நொய்ய வுரையேல்.

நைபவர் எனினும் — (கேட்போர் எதிர்பேசாமல்) வருந்துவோராயினும், நொய்ய — அற்பவார்த்தைகளை, உரையேல் — நீ சொல்லாதே.

ருஎ. நொய்யவ ரென்பவர் வெய்யவ ராவர்.

நொய்யவர் என்பவர் - (உருவத்தினாலே) சிறியவர் என்று இகழப்படுவோரும், வெய்யவர் ஆவர் — செய்காரியத்தால் யாவரும் விரும்புங் குணத்தையுடையவராவர்.

ருஅ. நோன்பென் பதுவே கொன்றுதின் னாமை.

நோன்பு என்பது - தவமென்றுசொல்லப்படுவது, கொன்று — (ஒருசீவனை) வதைசெய்து, தின்னாமையே — (அதன்மாமிசத்தைத்) தின்னாமையேயாம்.

ருகூ. பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரியும்.

பண்ணிய — (ஒருவன்) செய்த, பயிரின் — பயிரின் விளைவினாலும் விளைவில்லாமையினாலும், புண்ணியம் — (அவனிடத்தே) புண்ணியம் இருத்தலும் இல்லாமையும், தெரியும் — அறியப்படும்.

கூ0. பாலோ டாயினுங் கால மறிந்துண்.

பாலோடு ஆயினும் - பாலோடு கூடிய அன்னத்தை உண்டாலும், காலம் அறிந்து -(உண்ணத்தகுங்) காலத்தை அறிந்து, உண் - (நீ அதை) உண்ணு.

சுக. பிறன்மனை புகாமை யறமெனத் தகும்.

பிறன் - பிறனுடைய, மனை - மனையாளிடத்தில், புகாமை - (இச்சித்துப்) போகாமையே, அறம் எனத் தகும் - (எல்லாத்தருமங்களினும் உயர்ந்த) தருமம் என்று சொல்லத்தகும்.

சுஉ. பீரம் பேணி பாரந் தாங்கும்.

பீரம் பேணி - முலைப்பால் குறைவற உண்டு வளர்ந்தவன், பாரம் - பாரமானசுமையை, தாங்கும் - சுமப்பான். [அதுபோல முன்னே காரணங்களைக் குறைவறக் கொண்டவன் பின்னே பெரிய காரியங்களையும் வருத்தமின்றி முடிப்பான்.]

பீர் - முலைப்பால். அம் சாரியை.

சுங. புலையுங் கொலையுங் களவுந் தவிர்.

புலையும் - புலாலுண்ணுதலையும், கொலையும் - சீவவதை செய்தலையும், களவும் - பிறர்பொருளைத் திருடுதலையும், தவிர் - (நீ செய்யாது) ஒழித்துவிடு.

சுச. பூரியோர்க் கில்லை சீரிய வொழுக்கம்.

பூரியோர்க்கு - கீழ்மக்களுக்கு, சீரிய - சிறப்பாகிய, ஒழுக்கம் - நடையானது, இல்லை-(உண்டாதல்) இல்லை.

௬௫. பெற்றோர்க் கில்லை சுற்றமுஞ் சினமும்.

பெற்றோர்க்கு -- (மெய்ஞ்ஞானத்தைப்) பெற்றவருக்கு, சுற்றமும் – உறவினர்மேல் ஆசையும், சினமும்– (மற்றவர்மேல்) வெறுப்பும், இல்லை – இல்லை.

௬௬. பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்.

பேதைமை என்பது – அறியாமையென்று சொல்லப்படுங்குணமானது, மாதர்க்கு – பெண்களுக்கு, அணிகலம் – ஆபரணமாகும்.

௬௭. பையச் சென்றால் வையந் தாங்கும்.

பைய – மெள்ள, சென்றால் – (ஒருவன் தகுதியான வழியிலே) நடந்தால், வையம் – பூமியிலுள்ளோர், தாங்கும் – (அவனை) மேலாகக் கொள்வார்.

௬௮. பொல்லாங் கென்பவை யெல்லாந் தவிர்.

பொல்லாங்கு என்பவை – தீங்குகளென்று சொல்லப்பட்டவைகளாகிய, எல்லாம் – எல்லாவற்றையும், தவிர் – (நீ செய்யாது) ஒழித்துவிடு.

௬௯. போனக மென்பது தானுழந் துண்டல்.

போனகம் என்பது – போசனமென்றுசொல்லப்படுவது, தான் உழந்து – தான் பிரயாசப்பட்டுச் சம்பாதித்து, உண்டல் – உண்ணுதலாம். [உழப்பு – முயற்சி.]

௭0. மருந்தே யாயினும் விருந்தோ டுண்.

மருந்தே ஆயினும் – (உண்ணப்படுவது கிடைத்தற்கு அரிய) தேவாமிர்தமேயானாலும், விருந்தோடு – (வந்த) விருந்தாளிகளோடு கூடி, உண் – நீயும் உண்ணு.

எக. மாரி யல்லது காரிய மில்லை.

மாரி அல்லது – மழையினல் அல்லாமல், காரியம் – யாதொரு காரியமும், இல்லை – (யாருக்கும் நடப்பது) இல்லை.

எஉ. மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை.

மின்னுக்கு எல்லாம் – (வானத்திலே காணப்பட்ட) மின்னலுக்கு எல்லாம், பின்னுக்கு மழை – (அப்போது மழை யில்லையாயினும்) பின்னே மழை உண்டாகும். [அதுபோல ஒருவனிடத்திலே காணப்பட்ட நல்ல முயற்சிகளுக்கெல்லாம் அப்போது பயன் இல்லையாயினும் பின்னே பயன் உண்டாகும்.]

எங. மீகாம னில்லா மரக்கல மோடாது.

மீகாமன் – (தன்னை ஓட்டத்தக்க) மாலுமி, இல்லா – இல்லாத, மரக்கலம் – தோணியானது, ஓடாது – (கடலிலே செவ்வையாக) ஓடாது. [அதுபோலத் தன்னை முடிக்கத்தக்கவன் இல்லாத யாதொரு கருமமும் செவ்வையாக முடியாது.]

எச. முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்.

முற்பகல்* – ஒருமுகூர்த்தகாலத்தின் முன்பங்கிலே, செய்யின் – (பிறனுக்குத் தீங்கு) செய்தால், பிற்பகல்* அதன் பின்பங்கிலே, விளையும் – (செய்தவனுக்கு அத் தீங்கு தானே) உண்டாகும்.

பகல் – முகூர்த்தம்.

எரு. மூத்தோர் சொன்ன வார்த்தை யமிர்தம்.

---

* முற்பகல் பிற்பகல் என்பன பின்முன்னகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை.

மூத்தோர் – (கல்வியறிவினாலே) முதிர்ந்தவர், சொன்ன – சொல்லிய, வார்த்தை – வார்த்தையானது, அமிர்தம் – தேவாமிர்தத்தைப்போலும்.

எசு. மெத்தையிற் படுத்த னித்திரைக் கழகு.

மெத்தையில் – பஞ்சணையிலே, படுத்தல் – படுத்தலானது, நித்திரைக்கு – (ஒருவன் செய்கிற) நித்திரைக்கு, அழகு – அழகாகும்.

எஎ. மேழிச் செல்வங் கோழை படாது.

மேழி – கலப்பை பிடித்து உழுது பயிர்செய்தலால் உண்டாகுகின்ற, செல்வம் – செல்வமானது, கோழை படாது – (ஒருபோதும்) குறைவை அடையாது.

எஅ. மைவிழி யார்தம் மனைகன் றொழுகு.

மை விழியார்தம் – மை தீட்டிய கண்ணையுடைய வேசிகளது, மனை – வீடுகளை, அகன்று ஒழுகு – நீ அணுகாமலே விலகிப் போ.

எகூ. மொழிவது மறுக்கி னழிவது கருமம்.

மொழிவது – (கற்றோர்) சொல்லுகின்ற உபாயத்தை, மறுக்கின் – கேளாமற் செய்தால், கருமம் – (ஒருவன்செய்யுந்) தொழில், அழிவது – கெடுவதாகும்.

அ௦. மோன மென்பது ஞான வரம்பு.

மோனம் என்பது – மௌனநிலை என்பது, ஞானம் – மெய்ஞ்ஞானத்துக்கு, வரம்பு – எல்லையாகும்.

அக. வளவ னாயினு மளவறிந் தழித்துண்.

வளவன் ஆயினும் – (சம்பத்திலே) சோழனுக்கு ஒப்பானவனாய் இருந்தாயானாலும், அளவு – (பொருள்

வரவின்) அளவை, அறிந்து – தெரிந்து, அழித்து – (அதற்குத்தகச்) செலவழித்து, உண் – நீ அனுபவி.

அஉ. வானஞ் சுருங்கிற் றானஞ் சுருங்கும்.

வானம் – மழையானது, சுருங்கின் - பெய்தல் குறையுமாயின், தானம் – (சற்பாத்திரங்களுக்குக் கொடுக்கிற) கொடையும், சுருங்கும் – குறைவுபடும்.

அரு. விருந்திலோர்க் கில்லை பொருந்திய வொழுக்கம்.

விருந்து இலோர்க்கு – விருந்தினரை உபசரித்தல் இல்லாதவருக்கு, பொருந்திய – தாம் பொருந்திய, ஒழுக்கம் – இல்லறம், இல்லை – (இருந்ததாயினும்) இல்லாததற்குச் சமானமாகும்.

அச. வீரன் கேண்மை கூரம் பாகும்.

வீரன் – வீரனுடைய, கேண்மை – சிநேகம் ஒருவனுக்கு இருந்தால், கூர் அம்பு ஆகும் – (அவனுக்கு அதுவே தன் பகையை வெல்லுதற்குக்) கூர்மைபொருந்திய அம்பாகும்.

அரு. உரவோ ரென்கை யிரவா திருத்தல்.

உரவோர் என்கை – வல்லவரென்று சொல்லப்படுதல், இரவாது – (தமக்குச்சிறுமை வந்த காலத்திலும் பிறரை) இரவாமல், இருத்தல் – இருக்கையாம்.

அசா. ஊக்க முடைமை யாக்கத்திற் கழகு.

ஊக்கம் – (செய்தொழிலிலே) மனந்தளராமையை, உடைமை – (ஒருவன்) உடையனாதல், ஆக்கத்திற்கு (அவன்) செல்வத்திற்கு, அழகு – அழகாகும்.

௮௭. வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை.

வெள்ளைக்கு - களங்கமில்லாத பரிசுத்த குணமுடையவனிடத்து, கள்ளம் — வஞ்சனை பொருந்திய, சிந்தை — நினைப்பானது, இல்லை — இல்லை.

௮௮. வேந்தன் சீறி னாந்துணை யில்லை.

வேந்தன் — அரசனானவன், சீறின் -- (ஒருவனைக்) கோபித்தால், ஆம் — (அப்போது அவனுக்கு உபயோகம்) ஆகின்ற, துணை — துணை, இல்லை -- (ஒருவரும்) இல்லை.

௮௯. வையந் தோறுந் தெய்வந் தொழு.

வையம் தோறும் -- பூமியிலுள்ள தலந்தோறும் (போய்,) தெய்வம் -- கடவுளை, தொழு — (நீ தரிசித்து) வணங்கு.

௯0. ஒத்த விடத்து நித்திரை கொள்.

ஒத்த இடத்து -- (மேடுபள்ளம் இல்லாமற்) சமமான இடத்திலே, நித்திரை கொள் — (நீ படுத்து) நித்திரை பண்ணு.

௯௧. ஓதாதார்க் கில்லை யுணர்வொடு மொழுக்கம்.

ஓதாதார்க்கு — (அறிவுநூல்களைப்) படியாதவருக்கு, உணர்வொடும் -- அறிவுடனே, ஒழுக்கம் -- நல்லநடையும், இல்லை -- (உண்டாதல்) இல்லை.

கொன்றைவேந்தனுரை முற்றுப்பெற்றது.

